# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4 விலை 1 அணு இலங்கையில் 10 சதம் (விமானத் தபால்)

மலர் 13] சென்னை 18-10-56, துன்முகி, ஐப்பசி 2—வியாழன் (வெளியூர் 19-10-56 ஐப்பசி 3—வெள்ளி) [இதழ் 63


### துளசிதாஸர் வீட்டுக்கு முன் வெள்ளம்

லக்ஷ்மணபுரி, அக். 18—

தலைசிறந்த பக்த கவியரசு அமரர் துளசிதாஸரின் வீட்டை யமுனா நதிப் பெருக்கெடுத்ததால் ஏற்பட்ட வெள்ளத்திலிருந்து பாதுகாக்க உ. பி. சர்க்கார் 22 ஆயிரம் ரூபாய் செலவில் மணல் மூட்டைகளைக் குவித்திருக்கிறது.

### வெற்றிலைப் பூச்சிகளைத் தடுக்க ஆராய்ச்சி நிலையம்

சேலம், அக். 18—

வெற்றிலைப் பூச்சிகளைத் தடுப்பது சம்பந்தமான ஒரு ஆராய்ச்சி நிலையத்தை நாமக்கல்லில் நிறுவ சென்னை சர்க்கார் அனுமதியளித்துள்ளது. இதற்கு 41 ஆயிரம் ரூபாய் செலவாகும்.

# தங்கச்சுரங்கம் தேச உடமையாகும்

## அன்னியச் சுரண்டலுக்கு முடிவு

## மசோதாவுக்கு சர்வகட்சியினர் ஏகமனதான ஆதரவு

பங்களூர், அக். 18—

பல்லாண்டுகளாக அன்னியக் கம்பெனி சுரண்டிக் கொள்ளையடித்துவந்த கோலார் தங்கச் சுரங்கத்தை தேச உடமையாக்கும் மசோதா நேற்று மைசூர் சட்ட சபையில் ஏகமனதாக, பலத்த மகிழ்ச்சி ஆரவாரத்திற்கிடையில் நிறைவேற்றப்பட்டது.

தங்கச் சுரங்கங்கள் தேச உடமையாக்குவது குறித்து சகல கட்சி மெம்பர்களும் தங்கள் மட்டற்ற மகிழ்ச்சியைத் தெரிவித்தனர். மசோதாவின் ஷரத்துக்கள் விவாதத்தின்போது காங்கிரஸ் அங்கத்தினர் திரு. வெங்கடேஷ், சுரங்கக் கம்பெனியின் கீழ் வேலை செய்யும் சிப்பந்திகள் அனுபவித்துவரும் சலுகைகள் எவ்விதத்திலும் பாதிக்கப்படக்கூடாது என்பது சம்பந்தமாக மசோதவின் 5வது பகுதிக்கு சில திருத்தங்கள் கொண்டு வந்தார்.

திரு. பி. எச். சுவாமிதுரையும் கம்யூனிஸ்ட் அங்கத்தினர் திரு. கே. எஸ். வாசனும் மேற்படித் திருத்தங்களை ஆதரித்துப் பேசினர்.

அன்னியக் கம்பெனிக்கு அதிக நஷ்டஈடு கொடுப்பதைப் பல அங்கத்தினர்கள் கண்டித்துப் பேசினர்.

திரு. முல்கா கோவிந்த ரெட்டி பேசுகையில் சர்க்கார், அன்னியக் கம்பெனி விஷயத்தில் அளவுக்கு மீறிய தாராள மனப்பான்மை காட்டுவதாகவும், ஆனல் அதே சமயத்தில் தொழிலாளர் விஷயத்தில் கடுமையாக நடப்பதாயும் கூறினர்.

திரு. என். சி. நாகைய ரெட்டி (காங்கிரஸ்) பேசுகையில், சர்க்கார் அந்நியக் கம்பெனியைப் பற்றி கண் விழிப்புடன் இருக்க வேண்டுமென்றும், நவம்பர் 30ந் தேதிக்குள்ளேயே சுரங்கங்களைத் தங்கள் வசத்தில் எடுத்துக் கொள்ளவேண்டுமென்றும் கூறினர்.

உள்நாட்டு மந்திரி திரு. சித்தவீரப்பா விவாதத்திற்கு பதிலளிக்கையில், சர்க்காரின்மீது அங்கத்தினர்கள் அனாவசியமாக சந்தேகப்படுவதாகக் கூறினர்.

சுரங்கக் கம்பெனி தேசவுடமையாக்கப்பட்ட பின்னர், இப்பொழுது தொழிலாளிகள் அனுபவித்து வரும் சலுகைகளும், உரிமைகளும் எவ்விதத்திலும் பாதிக்கப்படாது என்றும் கூறினர்.

மசோதா ஏகமனதாக நிறைவேறியது.

### கருணை காட்டுக!

சென்னை, அக். 18—

பிரபல கேரளக் கலைஞரும், இந்திய மக்கள் கலை இயக்கப் பிரமுகருமான தோழர் வாசுப்பிள்ளை மீது விதித்திருக்கும் மரண தண்டனையை ரத்துசெய்ய வேண்டும் என்று சென்னை சட்டக் கல்லூரி மாணவர்கள் இந்திய ஜனதிபதியையும், திரு-கொச்சி ராஜப் பிரமுகரையும் கேட்டுக் கொண்டு கருணை மனு அனுப்பியிருக்கிறார்கள்.

## சூயஸ் பிரச்னை

## சமரசத்திற்கு ஜினிவாவில் பேச்சுவார்த்தைகள் தொடரும்

கெய்ரோ, அக். 18—

சர்வதேசக் கூட்டுறவுக்கு எகிப்து எப்பொழுதும் தயார். சர்வதேச ஆதிக்கம் என்றால் அதை அனுமதிக்க முடியாது. சூயஸ் கால்வாயை சர்வதேசக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வருவது என்பதையும் ஏற்க முடியாது என்று ஜனதிபதி நாஸரின் அரசியல் ஆலோசகரான தளபதி அலிசப்ரி நேற்று இங்கு கூறினர்.

பிரிட்டன் பிரான்ஸ் இவற்றுடன் மேலும் பேச்சுவார்த்தைகள் ஜெனிவாவில் நடத்தப்படலாம் எனவும், இதில் இந்நாடுகளின் வெளி விவகார மந்திரிகள் கலந்து கொள்வார்கள் எனவும் கூறினர்.

எகிப்துக்கும், கால்வாயை உபயோகித்து வரும் நாடுகளுக்கும் இடையே கூட்டுறவை ஏற்படுத்துவதற்கான ஒரு திட்டத்தை இந்தியா வகுத்து வருவதாக ஐ. நா. வட்டாரங்களில் கூறப்படுகிறது.

எகிப்தைப் பொறுத்தவரையில் அவசியமானல் பலாத்காரத்தைக் கையாளுவோம் என்ற ஈடனின் மிரட்டல் போக்கு வன்மையாகக் கண்டிக்கப்படுகிறது. இதை முற்றிலும் கைவிடாதவரை சமரசத்தில் நம்பிக்கையுள்ளதாகக்கொள்ளமுடியாதென்றுகூறப்படுகிறது. கால்வாயில் போக்குவரத்துவசதி, நியாயமான கட்டணம் அவசியமான மராமத்து இவற்றை எகிப்து நல்ல முறையில் நடத்தத் தயாராக இருக்கிறது என்பதும் தெட்டத் தெளிவாக்கப்பட்டுள்ளது.

கால்வாய் நடைமுறை நிர்வாகம் எந்த நாட்டின் அரசியல் செல்வாக்குக்கும் கட்டுப்பட்டுள்ளதாக இருத்தல் கூடாது என்று பந்தோபஸ்துக் கவுன்சிலின் ஆறம்சத்திட்டங்களில் ஒன்று கூறுகிறது.

சர்வதேச அரசியல் ஆதிக்கம் என்று இதற்கு எகிப்து விரிவுரை செய்யலாம். மறுபுறம் ஒரு நாட்டின் அதிகாரத்திற்கு உட்படுத்தக் கூடாது என்று மேலைநாடுகள் இஷ்டம்போல் பொருள் கொள்ளலாம் என்ற நிலை இருப்பதாக விவரமறிந்த வட்டாரங்கள் கூறுகின்றன.

### லோக் சபை தேர்தலுக்கு முன்கலைக்கப்படமாட்டாது

புதுடெல்லி, அக். 18—

இன்று அமுலில் உள்ள லோக சபை பொதுத் தேர்தலின் போதும் கலைக்கப்பட மாட்டாது எனவும், அதன் ஐந்தாண்டு காலவரையறை முடியும் 'வரையில் அதாவது 1957 மே மாதம் வரை இயங்கும் என தெரிகிறது.

## பிரதேச மொழிகளை அசட்டை செய்யக்கூடாது

## ஹிந்தியைப் பற்றி பிரதமர் நேரு

புதுடெல்லி, அக். 18—

ஹிந்தி தேசிய மொழியாக வளர்ந்து வருவதன் விளைவாகப் பிரதேச மொழிகளை அசட்டை செய்யும் நிலை ஏற்படக்கூடாது என்று ஜெயப்பூரில் நடைபெற்று வரும் அகில பாரதியா ராஷ்டிர பாஷா பிரசார சம்மேளனத்திற்கு அனுப்பிய ஒரு செய்தியில் பிரதமர் நேரு வலியுறுத்தியுள்ளார். ஹிந்தி தேசிய மொழியாக ராஜ்யங்களிடை தொடர்பு மொழியாக அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. இதர 14 மொழிகளும் பிரதான மொழிகளாக ஏற்கப்பட்டுள்ளன. அவற்றின் அபிவிருத்தியும் ஹிந்தியின் வளர்ச்சியுடன் சேர்ந்து முன்னேற வெண்டும் மென்றார்.

### சென்னை சட்டசபை

சென்னை, அக். 18—

சென்னை சட்டசபைக் கூட்டம் அக்டோபர் மாதம் 23-ம் தேதி காலை 11 மணிக்கு ஆரம்பமாகிறது. இதுவே கடைசி சட்டசபைக்கூட்டம்.

## கம்யூனிஸ்ட் சீனவில் பூர்ண மத சுதந்திரம் இருக்கிறது

## தரங்கம்பாடி பாதிரியார் பாராட்டு

அலகாபாத், அக். 18—

தரங்கம்பாடி பாதிரியார் ரெவ. ஆர். பி. மாணிக்கம், இங்கு கடந்த திங்களன்று கிருஸ்தவர்களின் கூட்டமொன்றில் பேசுகையில், சீனவில் கம்யூனிஸ்ட் ஆட்சி மாதா கோவில்களை அழித்துவிடவில்லை என்றார்.

சீனவின் சர்ச்சுகளைப் போய்ப் பார்வையிடுவதற்கு சீன சர்க்காரால் அழைக்கப்பட்ட முதல் கிருஸ்துவப் பாதிரி மாணிக்கம் தான் என்று தெரிகிறது.

சீனவில் முப்பது லட்சம் கிருஸ்துவர்கள் இருக்கிறார்களென்றும், அங்கு பரிபூர்ண மத சுதந்திரம் இருக்கிறதென்றும் திரு. ரெவ. மாணிக்கம் குறிப்பிட்டார்.

விபசாரம், சூதாட்டம், வேலையில்லாத் திண்டாட்டம், பணவீக்கம் ஆகியவற்றை ஒழிப்பதில் சீன பிரமாதமான வெற்றியடைந்திருப்பதாக ஷை பாதிரியார் குறிப்பிட்டார்.

### திரு-தமிழ் நாடு காங்கிரஸ்

திருவனந்தபுரம், அக். 18—

திரு-தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி தமிழ்நாடு காங்கிரசுடன் இணைவது சம்பந்தமாக தமிழ்நாடு காங்கிரசுடன் பேச்சு வார்த்தைகள்நடத்திகௌரவமான சமரசத்திற்கு வர இதன் தலைவர் நேசமணிக்குப் பூரண அதிகாரமளிக்கும் தீர்மானம் ஒன்றை இரணியலில் கூடிய திரு. த. நா. காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் நிறைவேற்றியுள்ளது.

## சொஸைடிகளுக்கு விசைத்தறி கிடையாது

## ஆந்திர சர்க்கார் முடிவு

கர்னூல், அக். 16—

ஆந்திர ராஜ்யத்தில் கோவாபரேடிவ் சொஸைடிகளுக்கு விசைத்தறிகள் எடுத்துக்கொள்ள கூடாது என்று ஆந்திர மந்திரி சபை முடிவு செய்துவிட்டது.

இந்திய சர்க்கார் விரும்புகிறபடி, தறிகளைப் பதிவு செய்வதற்கு ஆந்திர சர்க்கார் ஒப்புக்கொண்டுள்ளது.

தனிப்பட்ட முதலாளிகள் விசைத்தறி வைத்துக்கொள்ள அனுமதிக்கப்படுவார்களென முதலமைச்சர் கோபால் ரெட்டி கூறினர்.

இதுபற்றி ஆந்திர ராஜ்ய கைத்தறி நெசவாளர் காங்கிரஸ் காரியதரிசி ஸ்ரீ பிரகட கோட்டையா குறிப்பிடுகையில் அதிக அளவு கைநெசவாளர்கள் உள்ள சென்னை ராஜ்யத்திலும், ஆந்திராவின் உதாரணத்தைப்பின் பற்றுவார்கள் என்று நம்புகிறேன் என்றார்.

### சீனவில் எம். பி. க்கள்

புதுடில்லி, அக். 18—

இந்திய லோக சபைத் தலைவர் திரு. அனந்தசயனம் அய்யங்கார் தலைமையில் சீனவுக்கு வருகை தந்துள்ள இந்திய பாராளுமன்ற தூதுக் குழுவினர்க்கு, சீனக் குடியரசின் உதவிப் பிரதமர் மார்ஷல் சென்-ஈ ஹான்சோ நகரத்தில் கடந்த வெள்ளியன்று ஒரு விருந்துபசாரம் நடத்தினர்.

தூதுக் குழுவினரை வரவேற்றுப் பேசுகையில், மார்ஷல் சென் ஈ இந்தியாவிற்கும் சீனவிற்குமிடையே கால காலமாகத் தொடர்ந்து இருந்துவரும் நட்புறவுப் பிணைப்புகளைக் குறிப்பிட்டு, அவை மேலும் வலுப்பெறும் என்று குறிப்பிட்டார்.

திரு. அய்யங்கார் வரவேற்புக்கு பதிலளிக்கையில் இந்தியா-சீன நட்புறவு என்றும் நீடித்து நிற்கும் என்று குறிப்பிட்டார்.

### சீனகிருஸ்தவ இளைஞர்சங்க பிரதிநிதிகளுக்கு வரவேற்பு

சென்னை, அக். 18—

சென்னைக்கு விஜயம் செய்துள்ள சீனக் கிருஸ்தவ இளைஞர் சங்கப் பிரதிநிதிகள் பிஷப் வாங் சென்-இன், லி சௌ-போ, சூ பெய்-என் ஆகியோருக்கு நேற்று மாலை சென்னை எஸ்பிளனேட் ஒய். எம். சி. ஏ. சங்கத்தின் ஆதரவில் ஒரு விருந்துபசாரம் நடத்தப்பட்டது. திரு. எஸ். செல்லசாமி தலைமை வகித்தார். ஒய்.எம்.சி.ஏ. பொதுக்காரியதரிசி திரு. ஓ. வி, அலெக்ஸாண்டர் விருந்தினர்களை வரவேற்றுப் பேசினர்.

சீன ஒய். எம். சி. ஏ. பொதுக் காரியதரிசி திரு. லி-சௌ-போ பேசுகையில் சீனவில் பரிபூர்ண மத சுதந்திரம் இருக்கிறதென்றும், கிருஸ்தவ சர்ச்சுகள் யாருடைய பண உதவியுமின்றி சொந்தக் காலில் நின்று இயங்கிவருகின்றன என்றும் குறிப்பிட்டார்.

## "அன்று கதர் தூய்மை, இன்று அவமானச் சின்னம்"

## வினோபாஜி கூறுகிறார்

திருப்பூர், அக். 17—

"கதர் உடையானது எளிமைக்கும், புனித வாழ்க்கைக்கும், தூய சிந்தனைக்கும் அடையாளமாக கருதப்பட்டு வந்தது. கௌரவத்துக்கும் கண்யத்துக்கும் சின்னமாக ஒரு காலத்தில் கதர் விளங்கிற்று. ஆனல் இன்று அவமானத்தின் சின்னமாக விளங்குகிறது. நைஸ் கதர், நைஸ் கதர் என்று கடைசியாக மில் துணிக்கும் கதர் துணிக்கும் வித்யாசம் தெரியாதவாறு ஆக்கி விட்டார்கள்" என்று காந்தி நகரில் கூடிய தமிழ்நாடு—கேரள கிராமோதய கதர் சங்க மகாநாட்டில் வினோபாஜி குறிப்பிட்டார்.

### அழுகல் சமூகம்

மேலும் அவர் பேசுகையில், 'கஷ்டமென்னவென்றால், அழுகிப் போன பழைய சமூக அமைப்பை அப்படியே நிலைநிறுத்திக்கொண்டு அதில் ஒரு மாறுதல் வேண்டும் என்று எதிர்பார்க்கிறோம். அது முடியாது" என்றார்.

# ஜனசக்தி

தினஇதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

ஆசிரியர் குழு :

எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராமமூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன், கே. முத்தையா நிர்வாக ஆசிரியர்.

வியாழன் 18—10—56


## நேர்மை வேண்டும் பண்டிதரே ! (2)

தங்கள் வழி சமாதானமான வழி என்று இந்தியக் கம்யூனிஸ்டுகள் உறுதிப்படுத்தி வருகிறார்கள்.

அதுமட்டுமல்ல.

திட்டவட்டமாக அத்தகைய அமைதியான முறைகளை உத்தரவாதம் செய்யும் பொருட்டு பொதுவாழ்வின் ஒவ்வொரு மண்டலத்திலும், அரசாங்கத்தின் ஒவ்வொரு துறையிலும், ஜனநாயகத்தை வலுப்படுத்தப் போராடி வருகிறார்கள். இதே குறிக்கோளோடுதான், இந்தியக் கம்யூனிஸ்டுகள், இன்று, வரப்போகும் பொதுத் தேர்தலில் ஜனநாயக எதிர்ப்பின் (Democratic Opposition) பலத்தை ஆனமட்டும் திரட்ட முழு மூச்சோடு போராடி வருகிறார்கள்.

பண்டித நேரு இதை நம்பலாம் அல்லது நம்பாதிருக்கலாம். அவர் நம்பினால்—ஒரு பொறுப்புள்ள தலைவரிடம் ஒரு முக்யமான எதிர்க்கட்சி அதைத்தான் எதிர்பார்க்கும்—சென்ற தலையங்கத்தில் எடுத்துக் காட்டிய அவதூறுப் பிரசாரத்தை உடனடியாக அவர் நிறுத்த வேண்டும். அவர் நம்பாவிட்டால், அத்தகைய படுமோசமான குற்றச்சாட்டை கம்யூனிஸ்டுகள் மீது சுமத்துவதற்கு முன், அதை நிரூபித்து விட்ட பொறுப்புடைமையைக் காட்ட வேண்டும்.

நேர்மையான அரசியல் தர்க்க சூத்திரத்தையும், ஆரோக்கியமான தேர்தல் பிரசாரப் பண்பையும் கடைப்பிடிக்கும் யாரும் மேற்சொன்னபடி நடக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஆளும் கட்சியின் மாபெரும் தலைவரான பண்டித நேரு, மேற்படி விதி முறைகளை உறுதியாகக் கடைப்பிடிக்க வேண்டுமென்று நாம் எதிர்பார்க்கிறோம்.

காங்கிரஸ் ஊழியர் முகாமில் பேசிய மேற்படி பேச்சில், பிரதமர் இந்தியக் கம்யூனிஸ்டுகள் மீது மற்றொரு கண்டனக் கணையை வீசி இருக்கிறார்.

"லெனின் தலைமையில் ரஷ்யாவில் நடந்த போராட்டம் முழுவதும், திரும்பவும் இந்தியாவில் நடைபெற வேண்டுமென்று கம்யூனிஸ்டுக் கட்சி விரும்புகிறதா? சீனாவில், 40 வருட இடை முறியாத ஆயுதம் தாங்கிய போராட்டத்தின் பிறகு, அவர்கள் இன்று அங்கு காணப்படுகிற சமுதாய அமைப்பை நிலைநாட்டி இருக்கிறார்கள். அத்தகைய போராட்டத்தையும் சீரமைப்பையும் நமது நாட்டில் ஏற்றுக்கொள்ள முடியாது" இது தான் அவருடைய வினா-விடை வடிவமான கண்டனக் கணை.

எப்படியாவது எங்களைத் தாக்கிவிட வேண்டும் என்ற எண்ணம் மட்டுமில்லாமல், உண்மையிலேயே கம்யூனிஸ்டுகள் என்ன கருதுகிறார்கள் என்று காண பண்டித நேருவுக்கு அக்கரை இருக்குமானால், எங்கள் பதில் பட்டப்பகல் வெட்ட வெளிச்சமாக இருக்கிறது.

ரஷ்ய மக்களும் சீன மக்களும் சென்று தீர வேண்டி வந்த அந்தத் துன்பமும் துயரமும் நிறைந்த பாதையில், இந்தியக் கம்யூனிஸ்டுகளாகிய நாங்கள் துளி கூடச் செல்ல விரும்பவில்லை. அந்தப் பாதையை ஆனவகையிலெல்லாம் தவிர்க்க வேண்டுமென்பது, எங்கள் பகீரதப் பிரயத்தனம் என்று கூடச் சொல்லுவோம். தேவையான முதாய மாறுதல்களை, அமைதியான முறைகளில் கொண்டு வர வேண்டுமென்பதே எங்கள் உறுதியான கொள்கை.

ஆனால், இன்றைய ஆளும் வர்க்கத்தார் உருவிய வாளை உறையினுள் போட்டு விடுவார்களா? மக்கள்பால் காட்டும் பலாத்காரத்தை நிறுத்தி விடுவார்களா? பொது மக்களையும் நாடு முழுவதையும் பாதிக்கும் பிரச்னைகளுக்கு, அமைதியான ஜனநாயக முறைகளில் தீர்வு காண முன் வருவார்களா?

இந்தக் கேள்விகளுக்கு பதில் சொல்ல வேண்டியவர்கள் நாங்களல்ல. பதில் சொல்ல வேண்டிய பொறுப்பு இன்றைய அரசாங்கத்தின் தலைவர் என்ற முறையில் பண்டித நேருவையே சார்ந்தது.

## ஜனாதிபதி இன்னும் ஏன் கையெழுத்திடவில்லை?

சென்னை சட்ட சபையில் நியாயவார மசோதா நிறைவேறி 20 நாட்களாகி விட்டன. ஜனாதிபதியின் கையெழுத்துக் கிடைத்தால்தான் அது சட்டமாகும். ஆனால் இந்திய ஜனாதிபதி அதற்கு இன்னும் ஒப்பம் தரவில்லை.

இந்த மசோதாவுடன் நிறைவேறிய மற்றொரு மசோதாவான சாகுபடியாளர் பாதுகாப்பு மசோதாவிற்கு ஒப்பம் தந்தவர் இதில் மட்டும் இன்னும் கையெழுத்துப் போடவில்லை.

இதற்கு ஒப்புதல் தரக்கூடாதென்று சென்னை ராஜ்யத்திலுள்ள நிலச்சுவான்தார்கள் ஒரே கூக்குரல் போடுகிறார்கள். திருச்சி மிராசுதார்கள் ஜனாதிபதியிடம் தூது கோஷ்டி சென்றுள்ளனர். அவர்களிடம் மசோதாவை ஒத்தி வைக்க முடியாது என்று ஜனாதிபதி சொன்னதாகச் செய்தி ஒன்று வெளியாகியிருக்கிறது. அவ்விதமாயின் ஏன் கையெழுத்திட வில்லை என்றுதான் மீண்டும் கேட்கிறோம்.

பலஇடங்களில் அறுவடையான நெல் களத்துமேட்டிலேயே கிடக்கிறது. கடந்த செப்டம்பர் மாத அறுவடைக்கும் இந்த மசோதா பொருந்தும். மசோதா திருத்தப்பட்டிருந்த போதிலும் இன்னும் ஜனாதிபதி கையெழுத்தாகவில்லை என்று கூறி மிராசுதார்கள் தகராறு செய்கிறார்கள். முதலில் பழைய விகிதப்படி மிராசுதார்கள் அளந்து கொண்டுபோய் விட்டால் பின்னர் அதை வாங்குவதே ஒரு பெரும் போராட்டமாகும். சச்சரவுகள் அதிகரிக்கும்.

பல இடங்களில் நிலப்பிரபுக்களுக்கே சாதகமாக இருந்து வரும் போலீஸ் புதிய நிலைமையைப் புரிந்துகொள்ள மறுப்பதால் நிலைமை இன்னும் மோசமாகிறது.

எனவே, தாமதம் கூடாது. ஜனாதிபதியின் தாமதத்திற்கு எந்தக் காரணமுமே இல்லை. கையெழுத்திட மேலும் தாமதித்தால் நிலைமை மோசமாகுமாதலால், அதற்குப் பொறுப்பாளியாக ஜனாதிபதி இருக்கக்கூடாதென்பதால் கையெழுத்திடப்பட வேண்டுமென்று வற்புறுத்துகிறோம்.

## கோவை டி, காபி தொழிலாளர் சங்கம் நிர்வாகத்தோடு உடன்படிக்கை

கோவை, அக். 18—

கோவை டி, காபி தொழிலாளர் சங்கத்திற்கும் புருக் பாண்ட் கம்பெனி நிர்வாகத்திற்குமிடையே சென்ற 28-ம் தேதி கீழ்க்காணும் உடன்படிக்கை ஏற்பட்டது.

1956 அக்டோபர் 1-ம் தேதி முதல் தொழிலாளர்கள் அதிகப்படி உற்பத்தி செய்தால் உற்பத்தி போனஸ் கிடைக்கும். செப்டம்பர் முதல் தேதியிலிருந்து ரூ. 43-14-0 பஞ்சப்படியும் 6 பண்டிகைகளுக்கு முழுச் சம்பளம் பஞ்சப்படியும் கிடைக்கும். பஞ்சப்படி கோயமுத்தூர் விலைவாசி உயர்வுக்கு கொடுக்கப்படும். இந்த ஒப்பந்தம் 5 வருட காலத்திற்கு இரு தரப்பாரையும் கட்டுப்படுத்தும்.

## வாளும் கேடயமும்

மல்லன்

### மகத்தான சாதனை!

ராஜ்யச் சீரமைப்புச் சட்டத்தின் மகத்தான சாதனை என்ன? இரு மொழி பம்பாய் ராஜ்யம். இவ்வாறு யார் சொல்லுகிறார்கள்? பண்டித நேரு, மொரார்ஜிதேசாய் ஆகிய மத்ய, ராஜ்ய முதலமைச்சர்கள் சொல்லுகிறார்கள். தேபர், ஸ்ரீமன் நாராயணன் ஆகிய காங்கிரஸ் தலைவர்கள் சொல்கிறார்கள்.

அந்த ராஜ்யத்தின் 'மன்னர்'களான மகாராஷ்டிர மக்களும் குஜராத்தி மக்களும் என்ன சொல்கிறார்கள்? அவர்கள் இரு மொழி பம்பாய் ராஜ்யத்தின் பேச்சை, வரவை, நடப்பை எதிர்த்தார்கள், எதிர்க்கிறார்கள், எதிர்ப்பார்கள்.

* * *

திலகர் பெருமான் மகாராஷ்டிரர். காந்தியடிகள் குஜராத்தி, இருவரும் தேசத்தின் தந்தையர் இருவரும் மொழிவழி ராஜ்ய வாதிகள். மகாராஷ்டிரரும், குஜராத்தியரும் நவம்பர் முதல் நாளைத் துக்க நாளாகக் கொண்டாடப் போகிறார்கள். ஏன்? அன்று, அவர்கள் வேண்டாத இருமொழி பம்பாய் ராஜ்யம் பிறக்கிறது.

மற்ற மொழி "னர்க்கெல்லாம் மொழிவழி ராஜ்யம் உண்டு. மகாராஷ்டிரர்களுக்கும் குஜராத்திகளுக்குமட்டும் கிடையாது.

ஏன் இந்தப் பாரபட்சம்? இது ஓரவஞ்சனையல்ல. இந்தியா புத்துருப்பெறும் நவம்பர் முதல் நாளில் நேரு சர்க்கார், தங்கள் குருநாதர்களான திலகருக்கும் காந்திக்கும் செலுத்தும் காணிக்கையின் அழகு.

* * *

புதிய, பெரிய ராஜ்யம் பிறக்கு முன்பே, வல்லபாயின் வாரிசான மொரார்ஜியின் "தலை எழுத்து" மாற்றி எழுதப்பட்டு விட்டது. டாக்டர் அம்பேத்கார் கூறியபடி, மொரார்ஜியின் சர்வாதிகார மனப்பான்மை, போட்டியில்லாமல் தன்னைக் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்றும், தன் இஷ்டப்படி மந்திரி சபை அமைக்கவிட வேண்டும் என்றும் கோரியது. காங்கிரஸ்காரர்கள் அந்தக் கோரிக்கையைக் குப்பைக் கூடையில் எறிந்து விட்டார்கள். மொரார்ஜியும் பின்னடிப்பது தான் பெருமை அவதாரம் என்று முதலமைச்சர் பீடத்திலிருந்து மறைந்துவிட்டார்.

* * *

மனிதர், குஜராத்தைத் தன் காலடியில் விழவைக்க உண்ணாவிரதமிருந்து உயிரை விடப்பார்த்தார். நேருவும், தேபரும் அவருடைய 'நிஷ்காமிய' கருமத்தை தலையுல் தூக்கிவைத்து ஆடினார்கள்.

குஜராத்தி மக்கள் வேறு விதமாகப் பதில் கொடுத்தார்கள். கூட்டம் குழப்பத்தில் முடிந்தது இதன் தொடர்ச்சியாக, சட்டசபையில், முதல் முறையாக, அவர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம் வந்ததும், பெரிய ராஜ்யத்தில் முதலமைச்சர் பதவி பறிபோனதும்தான் கண் கண்ட பலன்.

* * *

இருமொழி ராஜ்யத்தை எதிர்த்து, மகாராஷ்டிரத்திலும், குஜராத்திலும், நூற்றுக்கணக்கான பஞ்சாயத் போர்டுகளிலும், நகர சபைகளிலும், அகமதாபாத் கார்ப்பொரேஷனிலும் ராஜிநாமாச் செய்திருக்கிறார்கள். அங்கெல்லாம் உப தேர்தல்கள் நடைபெற வேண்டியது ஜனநாயக முறை. ஆனால் இதை நினைத்தாலே பம்பாய் சர்க்காருக்கு பேதி ஆகிறது.

* * *

தாம் நேரில் சென்று புதிய ராஜ்யத்தை குஜராத்திகள் தலையில் திணித்து விடலாமென்று பண்டித நேரு மனப்பால் குடித்தார்- குஜராத் மாணவர் உலகம் நிதானத்துடன், அவருக்குமட்டு மரியாதை செய்து அனுப்பினார்கள்.

ஜனாதிபதி, கேரளத்திற்கும் கர்நாடகத்திற்கும் புதிய ராஜ்யத் துவக்கு விழாவுக்குப் போகிறார். நமது மதிப்புக்குரிய பிரதமர் நேரு விசால ஆந்திரத் துவக்கு விழாவுக்குப் போகிறார். பம்பாய்ப் பக்கம் திரும்பிக்கூட தலைசாய்க்கவில்லை.

பார்த்தீர்களா, இருமொழி பம்பாய் ராஜ்யம் என்ற மகத்தான சாதனையை!

## இன்ஷூரன்ஸ் சிப்பந்திகளுக்கு சம்பள போர்டு ஏற்படுத்துக

சென்னை, அக். 18—

உழைக்கும் பத்திரிகையாளர்களுக்கு சர்க்கார் ஒரு சம்பள போர்டை ஏற்படுத்தியிருப்பது போல், இன்ஷூரன்ஸ் சிப்பந்திகளுக்கும், சிப்பந்திகளின் பிரதிநிதிகள், ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனின் பிரதிநிதிகள் கொண்ட ஒரு சம்பள போர்டை ஏற்படுத்த வேண்டுமென்று திரு. ஆர். வெங்கட்ராமன் (எம். பி.) அக்டோபர் 15-ந் தேதியன்று இன்ஷூரன்ஸ் சிப்பந்திகள் கூட்டமொன்றில் பேசுகையில் குறிப்பிட்டார்.

அகில இந்திய ஆயுள் இன்ஷூரன்ஸ் சிப்பந்திகள் சங்கத்தின் உப தலைவர் திரு. சைலன்கோஷ் பேசுகையில், இன்ஷூரன்ஸ் சிப்பந்திகளின் கோரிக்கைகளைப் பற்றி பரிசீலனை செய்ய ஒரு கமிஷன் ஏற்படுவதை வரவேற்பதாகக் கூறினார்.

சர்க்கார் நிர்ணயித்திருக்கும் புதியசம்பள விகிதங்கள் சிப்பந்திகளின் வயிற்றிலடிப்பதாகுமென்றும், ரிசர்வ் பாங்க் சிப்பந்திகளுக்கு நிர்ணயிக்கப்பட்டுள்ள சம்பள விகிதங்களே தங்களுக்கும் நிர்ணயிக்கப்படவேண்டும் என்றும் கூறினார்.

## சத்தியாக்கிரகம் தொடரும் தமிழரசுக் கழக நிர்வாகக் கமிட்டி முடிவு

சென்னை, அக். 18—

இரண்டு நாட்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட சத்தியாக்கிரகம் போராட்டம் பற்றி விவாதித்த தமிழரசுக் கழகத்தின் நிர்வாகக் கமிட்டி எல்லைக் கமிஷன் கோரியும், ஆந்திர சென்னை ராஜ்ய எல்லைத் தகராறைத் தீர்க்கவும் கோரி நடத்தும் சத்தியாக்கிரகத்தைத் தொடர்ந்து நடத்துவதாகத் தீர்மானித்திருக்கிறது. அக். 15-ந் தேதி போராட்டத்தில் கலந்து சிறைசென்ற தோழர்களை கமிட்டி பாராட்டியது.

## கிராமத்திற்கு ஒரு பள்ளிக்கூடம்

சென்னை, அக். 18—

1957ம் ஆண்டு துவங்குவதற்குள் சென்னை ராஜ்யத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் ஒரு பள்ளிக்கூடம் இருக்கும்; பள்ளிக்கூடம் இல்லாமல் ஒரு கிராமமும் அவதிப்படக் கூடாது, என்று சைதாப்பேட்டை பழைய மாம்பலம் தெருவில் அக்டோபர் 13-ந் தேதியன்று கிருஷ்ணா ஆரம்பப் பாடசாலையின் புதிய கட்டிடத்தைத் திறந்துவைக்கும்போது, கல்வி இலாகா டைரக்டர் திரு. என். டி. சுந்தரவடிவேலு கூறினார்.

## கட்டாய ஆங்கிலத்திற்கு சர்வகலாசாலை தலைவர்கள் ஆதரவு

விசாகப்பட்டணம், அக். 18—

தென் பகுதியிலுள்ள சர்வகலாசாலைகளின் உப அத்தியட்சகர்களின் மகாநாடு ஆந்திர சர்வகலாசாலை கட்டிடத்தில் நேற்று முன்தினம் நடைபெற்றது. பட்டப் படிப்பு மூன்றாண்டுகளுக்கே இருக்கவேண்டும் எனவும் பிரதேச மொழியுடன் ஆங்கிலமும் கட்டாய பாடமாக வைக்கப்பட வேண்டும் எனவும் முடிவுசெய்யப்பட்டது. சென்னை, ஆந்திரா, திருவிதாங்கூர், உஸ்மானியா, திருப்பதி சர்வகலாசாலை தலைவர்கள் கலந்துகொண்டார்கள்.

## அலைஓசை

கதர்—அயோக்யத்தனத்தின் அறிகுறி.

—கிராமோதய, காதி சங்க மாநாட்டில் வினோபா.

என்ன இருந்தாலும் உங்கள் வாயிலிருந்து இப்படி வரக்கூடாது பாபாஜி. சரி, வந்துவிட்டது. ஆனாலும் அந்த காங்கிரஸ் மகாத்மாக்களுக்கு உறைக்கவா போகிறது? அதிகார போதையால் அவர்களுடைய தோல்தான் காண்டாமிருகத்தின் தோல் போல் தடித்துவிட்டதே என்றுமன முருகி வேதனைப்படுகிறார் ஒரு கால் நூற்றாண்டுக் கதர் பக்தர்.

* * *

விலைவாசி உயர்வைத் தடுக்க, உணவும் விவசாயமும் ஒரு மந்திரியிடம் சேர்ந்திருப்பதை உடைத்து இரண்டு மந்திரிகளிடம் கொடுக்கப்படுகிறது.

—புதுடில்லிச் செய்தி.

ஆஹா! நேரு சர்க்காரின் மூளையே மூளை! கொள்கையில் கல்லுப் பிள்ளையார் மாதிரி இருந்துகொண்டு, தனி மந்திரி நியமித்துவிட்டால், விலைவாசி 'பொத்துப் பொத்' தென்று கீழே விழும்? என்று 'ட்டா'ணென்று கேட்கிறான் சின்னக் குடலைப் பெரிய குடலுக்குத் தீனி போடுகிற சிவலோகம்.

* * *

எல்லைப் போராட்டம்-வெறும் ஆர்ப்பாட்டம்.

—"மெயில்" தலையங்கம்.

'மெயில்' ஆசிரியர் அவர்களே! மக்கள் பார்வை வேறு உங்கள் பார்வை வேறு என்ற பகிரங்க ரகசியம் கோவணக்கட்டிக் குப்பனுக்குக் கூடத் தெரியும். ஆகவே உபதேசத்தை நிறுத்தும் என்கிறான் ஆத்திரங் கொண்ட ஒரு வடக்கெல்லை வீரன்.

* * *

மொரார்ஜி தேசாயின் போக்கு சர்வாதிகாரத் தன்மை கொண்டது.

—டாக்டர் அம்பேத்கார்

சரி, சரி! நியாய உணர்ச்சி கொண்ட நாங்கள் கண்டு கொண்டதை, சட்ட அறிவுமிக்க நீங்கள் சரி என்கிறீர்கள், சபாஷ் என்கிறான் ஒரு மகாகுஜரத்வாதி.

* * *

தேர்தலில் மிராசுதார்கள் போட்டியிடுவார்கள்.

—நாகப்பட்டினம் செய்தி.

கொட்டு மேளத்தோடு போட்டியிடட்டும்! காங்கிரஸ் வேஷம் போட்டாலென்ன, போடாவிட்டாலென்ன, நாங்கள் தயாராகவே இருக்கிறோம் என்று நம்பிக்கை துடிக்க முழங்குகிறான் ஒரு விவசாய சங்கத் தோழன்.

## மிராசுதார்கள் தேர்தலில் நிற்பார்கள்

நாகை, அக். 18—

தங்களுடைய நலவுரிமைகளைக் காத்துக்கொள்ளுவதற்காக, சட்ட சபைக்குள் சென்று போராடுவதென்றும், அதற்காக வரப்போகும் பொதுத் தேர்தலில் மிராசுதார்கள் சங்க சார்பிலேயே அபேட்சகர்களை நிறுத்துவதென்றும் தஞ்சை ஜில்லா மிராசுதார்கள் தீர்மானம் நிறைவேற்றியுள்ளார்கள்.

நாகை தாலூகா வேலிபாளையத்தில் மிராசுதார் ஸ்ரீ ஏ. எம். பி. சுப்பராய செட்டியார் தலைமையில் நடைபெற்ற மிராசுதார் பொதுக்கூட்டத்தில் மேற்கண்டவாறு தீர்மானம் நிறைவேற்றினார்கள்.

காங்கிரஸ்மீது மிராசுதார்களுக்கு கோபமில்லை யென்றும், ஆனாலும் மிராசுதாரர்களுடைய நில நலஉரிமைகளைப் பாதுகாக்க மிராசுதார்களையே சட்ட சபைக்குள் அனுப்ப வேண்டியது அவசியமென்றும் மிராசுதார்கள் பேசினார்கள்.

கிராமந்தோறும் கமிட்டிகளும்; கூலி கொடுத்து ஆர்கனைஸர்களும் ஏற்படுத்துவதென முடிவு செய்யப்பட்டது.

# அச்சு, சாயத் தொழில் அபிவிருத்தியடைய

## தொழிற்சாலையாளர் கோரிக்கை

கோவை, அக். 16—

சென்னை ராஜ்ய சாய அச்சுத் தொழிற்சாலையாளர் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் இங்கு எம்.கே. சின்னப்ப கவுண்டர் தலைமையில் நடந்தது.

ஈரோடு, மதுரை, கோவை ஆகிய பல ஊர்களிலிருந்தும் கமிட்டி மெம்பர்கள் வந்திருந்தனர். விவாதத்திற்குப் பின் கீழ்வரும் முடிவுகள் எடுக்கப்பட்டன. இந்தத் தொழில் சம்பந்தப் பட்டோரின் மகாநாட்டை மதுரையில் 1957 ஜனவரியில் நடத்துவதென்றும், வெளிநாடுகளிலிருந்து சாயம், கெமிகல் பொருள்கள் இறக்குமதிக்கு உள்நாட்டுத் தேவையை மனதில் கொண்டு தாராளமாக அனுமதிவழங்கப்பட வேண்டுமென்றும் இவைகளின் விலை உயர்வைத் தடுக்கவேண்டும் என்றும், விசைத்தறி புகுத்துவதால் சாயத்தொழிலும் பாதிக்குமாதலால் அதைப் புகுத்தக்கூடாதென்றும், சீட்டி, சேலைகளை அச்சிடும் தொழிலுக்குஉதவ 'டிசைன் கண்டுபிடிப்பு நிலையங்கள்' தொடங்கவேண்டும் என்றும், சாய அச்சுச் சாலையாளருக்கு கூட்டுறவு சொசைடி ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும் என்றும், விற்பனை வரியிலிருந்து விதி விலக்கு அளிக்க வேண்டுமென்றும் கோரி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## தீபாவளிக்குப் போனஸ் வேண்டும்

### ராஜேஸ்வரி மில் தொழிலாளர் கோரிக்கை

குடியாத்தம், அக். 15—

1955-ம் வருடத்திய போனஸ் தொகை, வருகிற தீபாவளிப் பண்டிகைக்குள் கிடைக்க மில் நிர்வாகம் முன்வர வேண்டும். இல்லையென்ருல் இந்தக் கோரிக்கையை முன்வைத்துப் போராடுவதென்று ராஜேஸ்வரி மில் தொழிலாளர்கள் முடிவு செய்துள்ளார்கள். சென்ற வருட போனஸ் தொகை தாமதமின்றி கொடுபட வேண்டுமென்று கடந்த 5 மாத காலமாக டெக்ஸ்டைல் லேபர் யூனியன் கேட்டு வருகிறது.

## நடக்கஇருப்பவை...

21-10-56 காலை 9 மணிக்கு பழைய சூரமங்கலத்தில் இருந்து புறப்பட்டு சேலம் நகர முக்கிய தெருக்கள் வழியாக 'அரசியல் கைதிகள் விடுதலை' கோரி ஒரு சைக்கிள் ஊர்வலம் நடத்தப்படும். இதில் ஏ. ஐ. டி. யூ. ஸி. சம்பந்தப்பட்ட தொழிற்சங்கங்கள் கலந்து கொள்ளும்.

* * *

தமிழ் நாடு 5—வது மருத்துவர் மாகில மாநாடு 23-10-56-ல் சென்னை செயின்மேரீஸ் ஹாலில் நடைபெறும்.

## மதுரை நகரசபையில் தியாகிக்கு வணக்கம்

### காங்கிரஸின் சண்டித்தனம்

மதுரை, அக். 16—

நேற்று சேர்மன் ராணி சுப்புராம் தலைமையில் மதுரை நகர சபைக்கூட்டம் நடைபெற்றது. வீரத்தியாகி சங்கரலிங்கனருக்கு அனுதாபம் தெரிவிக்கும் முறையில் அனைவரும் எழுந்து நின்று மரியாதை செலுத்தினர்கள்.

10 நிமிஷம் சபையை ஒத்தி வைக்கவேண்டுமென்று சேர்மன் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். நாளைவரை ஒத்திவைக்கவேண்டுமென்று திரு எஸ். முத்து (தி. மு. க., திருத்தம் கொண்டு வந்தார். பின்னர். மதுரைவிரன், எஸ். காமராஜ், எஸ். கருப்பையா ஆகிய கம்யூனிஸ்டுகளும், மற்றும் வி.கே. தாஸ் (பி. சோ.) என். ஆர். ராமகிருஷ்ணன், அழகிரிசாமி, அன்ன ரெங்கன் ஆகியோர் ஒரு நாள் ஒத்திவைக்கவேண்டுமென்று வாதாடினர்கள். காங்கிரஸ் அங்கத்தினர்கள் மறுத்தார்கள்.

இந்த சமயத்தில் நகரசபைக்கு வெளியே நூற்றுக்கணக்கான மக்கள் கிளர்ச்சி வலுத்துவிட்டதாக கம்யூனிஸ்ட் அங்கத்தினர் எஸ். கருப்பையாவும், ஜனப் ஹீராவும் சேர்மனிடம் கூறவே, சேர்மன் கூட்டத்தை ஒத்தி வைத்து விட்டார். (ந. நி.)

## திருப்பூர்

திருப்பூர், அக். 16—

நேற்று மாலை திருப்பூர் பனியன் பாக்டரி தொழிலாளர் ஊர்வலமும், பொதுக் கூட்டமும் நடைபெற்றது. கூட்டத்தில் விருதுநகர் தியாகி சங்கரலிங்கனர் மறைவிற்கு அனுதாபம் தெரிவித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டு, அன்னர் உறவினர்களுக்கு அனுப்பப்பட்டது.

## திருச்சி தபால் ஊழியர்கள் கூட்டம்

திருச்சி, அக். 16—

அகில இந்திய தபால் ஊழியர் சங்கம் 3வது பிரிவு திருச்சிக் கிளையின் பொதுக்கூட்டம் பி. ஜி. வெங்கட்டராமன் தலைமையில் சென்ற 14-ம் தேதி நடைபெற்றது. திருச்சி டிவிஷன் முழுவதும் 30 சங்கக் கோரிக்கைகளை ஆதரித்துப் பிரச்சாரம் செய்வதென்றும், சென்னை மாகாணத்திற்கு தமிழ்நாடு என்று பெயரிட வற்புறுத்தியும், தியாகி சங்கரலிங்கனரின் மறைவுக்கும், கடமையைச் செய்யும்போது வெள்ளத்தால் அடித்துச் செல்லப்பட்டு மரணமடைந்த பொன்னுசாமிக்கும் அனுதாபம் தெரிவித்து தீர்மானங்கள் நிறைவேறின.

## "பீகிங் ஜெயிலில் நேபாள மந்திரி"!

பீகிங், அக். 16—

நேபாளப் பிரதமர் தங்கப் பிரசாத் ஆச்சார்யாவும் அவரது மனைவியாரும் இன்றுபீகிங்சிறைச் சாலையைப் பார்வையிட்டார்கள். அதிலுள்ள பஞ்சாலைகள், பட்டுத் தொழிற்சாலைகள் ஆகியவற்றைப் பார்த்தபிறகு, இது என்ன, ஜெயிலா, தொழில் நகரமா? என்று ஆச்சரியத்துடன் கேட்டார்கள்.

கைதிகளுக்கு சம்பளம்கொடுப்பதில்லையென்றும், ஆனல் மாதம் தோறும் போனஸும், தண்டனைக்காலத்தில் கழிவும் கொடுக்கப்படுகிறதென்றும் சிறை சூப்பிரண்டு கூறினர்.

சிறைக்குள் சினிமாவும், கைதிகளால் நடத்தப்படும் நாடகக் கம்பெனிகளும்,பேஸ்கட் பால், வாலி பால் விளையாட்டு வசதிகளும் உள்ளன. சிறைக்கு வரும் ஒவ்வொரு கைதியும் எக்ஸ்ரே எடுக்கப்படுகிறார்.

—நவசீன செய்தி

## நியாய விலைக் கடைகள் திறக்காததேன்?

பழனி, அக். 10—

கம்யூனிஸ்ட் கட்சி மற்றும் பல பொதுஜன ஸ்தாபனங்களின் வற்புறுத்தலின் பேரில் 12 நியாய விலைக் கடைகள் திறக்க அதிகாரிகள் முதலில் ஒப்புக்கொண்டனர். ஆனல் இப்போது பழனி நகரில் ஒரு கடை மட்டும் திறக்கப் போவதாகக் கூறுகின்றனர். அதுவும் இந்தக் கடை எப்போது திறக்கப்படும் என்பது தெரியாது என்று கூறுகின்றனர். இதுதான் சர்க்கார் நியாயவிலைக் கடைகள் திறந்து மக்களது கஷ்டங்களைப் போக்கும் லட்சணமா என்று ஜனங்கள் பேசிக்கொள்கிறார்கள்.

## சேலம் கலெக்டரிடம் பேட்டி

திருச்செங்கோடு, அக். 15—

திருச்செங்கோடு மில் தொழிலாளர் சங்கத் தலைவரும் சட்ட சபை உறுப்பினருமான டி. எஸ். அர்த்தநாரி, பொதுச் செயலாளர் ஜே. ஆர். சண்முகம் ஆகிய இருவரும் இன்று சேலம் ஜில்லாக் கலெக்டரைப் பேட்டி கண்டனர். திருச்செங்கோடு தொழிலாளர் ஸ்டோர் நியாயவிலைக் கடை நடத்த அனுமதிக்க வேண்டும் என்றும், இதனல் விலைவாசி உயர்வால் அவதிப்படும் தொழிலாளர்களின் கஷ்டம் ஓரளவுக்குக்குறையும் என்றும் விளக்கிக் கூறி ஒரு மகஜர் சமர்ப்பித்தனர். சீக்கிரம் இது சம்பந்தமாக ஆவன செய்வதாக கலெக்டர் கூறினர். அன்றே தோழர்கள் இருவரும் சேலம் கூட்டுறவு உதவி ரிஜிஸ்தாரைக் கண்டு தொழிலாளர்களுக்குக் கடன் கொடுக்கும் பேங்க் ஏற்படுத்தித் தரக் கேட்டுக்கொண்டனர்.

## கரூர் வீவிங் பாக்டரியில் வெற்றி

கரூர் அக். 16—

கரூர் கே.என்.எஸ்.பி. ஆர்.ஆர். வீவிங் பேக்டரியை 1955 ஜூலையில் மூடிப்போட்டு தொழிலாளரைப் பட்டினி போட்டார்கள். தகராறு சென்னைத் தொழில் கோர்ட்டுக்குப் போயிற்று. 29-9-56ல் தீர்ப்பு வெளியாயிற்று. பேக்டரிக்குள் வேலை செய்த தொழிலாளர்கள் 35 பேருக்கும் ரூ. 2000 நஷ்டஈடு தரவேண்டுமென்று தீர்ப்பாகியது. 20 ஆண் தொழிலாளருக்கு ரூ. 85 வீதமும், பெண்களுக்கு ரூ. 20 வீதமும் நஷ்டஈடு தரப்பட்டது. (ந. நி.)

## வள்ளியூரில் தண்ணீர் 'டாங்கி'

வள்ளியூர், அக். 15—

திருநெல்வேலி ஜில்லா வள்ளியூரில் உடனடியாக தண்ணீர் டாங்கி கட்ட வேண்டுமென்று ஜில்லா கலெக்டருக்கு 404 பேர் கையெழுத்திட்ட பொதுஜன மகஜர் வாலிபர் சங்கத்தின் சார்பில் அனுப்பினர்கள். (ந. நி.)

# தோழர் எஸ். ஷண்முகம் 60வது ஆண்டு நிறைவு விழா

திருநெல்வேலி, அக். 10—

முற்போக்கு எழுத்தாளரும், கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினருமான சிந்துபூந்துறை தோழர் எஸ். ஷண்முகத்தின் அறுபதாம்ஆண்டு நிறைவைப் பாராட்டும் பொருட்டு ஸ்டுடென்ஸ் டுட்டோரியல் பள்ளியில் 9-10-56ல் ஒரு கூட்டம் நடைபெற்றது. கம்யூனிஸ்ட் கட்சியின் ஜில்லாக் கமிட்டிக் காரியதரிசி தோழர் பி. மாணிக்கம் தலைமை வகித்தார்.

தோழர் ஷண்முகத்தின் 20 வருட அரசியல்தொண்டு,தியாகம், கட்சிப்பற்று, தன்னடக்கம்,எழுத்துத் திறமை ஆகியவற்றைப் பற்றி பழம்பெரும் தேசபக்தர் வக்கீல் வி. சுப்பிரமணிய அய்யர் (காங்கிரஸ்), தோழர்கள் என். டி. வானமாமலை, சங்கரனர், மைதீன், ராமலிங்கம், ஜிம்மி ராபர்ட்ஸ், முத்து, என். ஷண்முகம் ஆகியோர் பேசினர்கள்.

கம்யூனிஸ்ட் கட்சி, பீடி, சிமிண்டு தொழிலாளர் சங்கங்கள் சார்பில் தோழர் எஸ். ஷண்முகத்துக்கும் அவரது மனைவியாருக்கும் மாலைகள் சூட்டப்பெற்று புகைப்படமும் எடுக்கப்பட்டது.

கட்சியின் தமிழ்நாடு கமிட்டி, ஜனசக்தி ஆசிரியர் குழாம், ஜனசக்தி பிரசுராலயம், நியூ சென்சுரி புத்தக நிலையம் ஆகியவைகளின் வாழ்த்துச் செய்திகள் வாசிக்கப்பட்டன.

## குடிசைகளிலிருந்து வெளியேற்ருதே!

ஒட்டன்சத்திரம், அக். 17—

ஹைவேஸ் புறம்போக்கில் பொது ஜனங்களுக்கும், போக்குவரத்துக்கும், சுகாதாரத்திற்கும் எவ்வித இடைஞ்சலுமின்றி சிறு சிறு குடிசைகளும், கூரை கொட்டகைகளும் போட்டுக் கொண்டு எளிய வாழ்க்கை நடத்தி வருபவர்களை நிர்வாக அதிகாரிகள் 'பி மெமோ' கொடுத்து வெளியேற்ற முயற்சிக்கிருர்கள்.

14ந் தேதி நடைபெற்ற ஹைவேஸ் ஷாப் கீப்பர்ஸ் யூனியன் கூட்டத்தில், அதிகாரிகளின் மேற்படி நடவடிக்கையைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதுடன் பழனி தாசில்தார், திண்டுக்கல் சப் கலெக்டர் ஆகியோருக்கும் இதுபற்றி 'விண்ணப்பித்துக்கொள்ளவும் முடிவு செய்யப்பட்டது. இவ்விஷயத்தில் தொடர்ந்து வேலை செய்ய வி. சின்னுப் பிள்ளையைத் தலைவராகவும் எ. எஸ். மணி நாடாரைக் காரியதரிசியாகவும் கொண்ட ஒரு கமிட்டி நிறுவப்பட்டது.

## படகுத்தொழிலாளர் சங்கத் தேர்தல்

கடலூர், அக். 15—

இன்று காலை 10-மணிக்கு நடைபெற்ற படகு தொழிலாளர் கூட்டத்தில் சங்கத்திற்கு புது நிர்வாகக் குழு அமைக்கப்பட்டது. அமிர்தலிங்கம் (நகரசபை உறுப்பினர்) தலைவர், கணபதி செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## வடக்கு எல்லைப் போராட்டம்

குடியாத்தம், அக். 15—

தமிழரசுக் கழகத்தினர் நடத்திவரும்' வடக்கு எல்லைப் போராட்டத்தையொட்டி, இன்று இவ்வூர் கழகத் தொண்டர்கள் பெங்களூர்-சென்னை துரித வண்டியை அபாயச் சங்கிலியை இழுத்து நிறுத்தினர்கள். காவலூர், விவஞ்சீபுரம் ஆகிய ஸ்டேஷன்களுக்கிடையேயும் ரயில் நிறுத்தப்பட்டது. லோகநாதன், ஞானந்தம், இராமகிருஷ்ணன், தாமோதரம்,மாணிக்கம் ஆகிய 5 தொண்டர்கள் போலீஸாரால் கைது செய்தனர்.

கும்பகோணம், அக். 15—

நகர தமிழரசுக் கழகத் தொண்டர்களில் ஒரு பகுதியினர் இன்று சச்சிதானந்தம் தலைமையில் தலைமை தபால் அலுவலகத்தின் முன் சத்தியாகிரகம் செய்தனர். சஞ்சீவி தலைமையில் மற்ருெரு பிரிவினர் சென்னைக்கு செல்லும் ரயிலை அபாயச் சங்கிலிப் பிடித்திழுத்து நிறுத்தினர். அவர்கள் மீது ரயில்வே போலீஸார் ஒரு வழக்குப் பதிவு செய்து கொண்டு, அனுப்பி விட்டனர். இரண்டாவது தினம் நடைபெற்ற சத்தியாகிரகத்தில் 4 தொண்டர்கள் கைதாகினர்.

கடலூர், அக். 16—

கடலூர் தபால் அலுவலகத்தின் முன்பு மறியல் செய்தது சம்பந்தமாகவும், ரயிலை நிறுத்தியது சம்பந்தமாகவும் 10 தமிழரசுக் கழகத் தொண்டர் கள்கைது செய்யப்பட்டு ஜாமீனில் விடப்பட்டனர்.

பழனி, அக். 15—

தபால் அலுவலகம்முன்பு சத்தியாகிரகம் செய்ததற்காகவும், போராட்டத்தை ஒட்டி முன்னெச்செரிக்கையாகவும் ஒட்டன் சத்திரம், பழனி, கலயம்புத்தூர் ஆகிய ஊர்களில்போலீசார் 22தமிழரசுக் கழகத் தொண்டர்களைக் கைது செய்துள்ளனர். இவர்கள் இருவரும்நகரசபை உறுப்பினராவர்.

பட்டுக்கோட்டை, அக். 15—

வடசேரி ஔவைப் படிப்பகத்தைச்சேர்ந்த 6 தமிழரசுக்கழகத் தொண்டர்கள் இன்று அபாயச் சங்கிலியை இழுத்து ரயிலை நிறுத்தியதற்காக போலீஸாரால் கைது செய்யப்பட்டனர்.

## "தொழிலரசு" வாசகர்களும் ஏஜண்டுகளும் அறிக

பொன்மலை, அக். 17—

எதிர்பாராத பல வேலைகளின் காரணமாகவும், அச்சு இயந்திரத்தில் ஏற்பட்ட கோளாரின் காரணமாகவும் 15-10-56 ந்தேதி வெளிவரவேண்டிய "தொழிலரசு" இதழ் நிறுத்தப்பட்டுள்ளது. 1-11-56-ந் தேதிய இதழ் முன் கூட்டியே 25-10-56 ந்தேதியே வெளியிட ஏற்பாடு செய்திருப்பதாகவும், சந்தாதாரர்களுக்கு சந்தா முடிவில் ஒரு இதழ் அதிகமாகச் சேர்த்து அனுப்பப்படும் என்றும், "தொழிலரசு" மானேஜர் (ஆசிரியர்) திரு. என். கிருஷ்ணசாமி அறிவிக்கிருர்.

அரவிந்த ஆசிரம

# உண்ணுவிரதிகளின் நிலை மோசம்

## சிலரை ஆஸ்பத்திரிக்குக் கடத்திச்சென்றனர்

### ஒன்றுபட்ட கிளர்ச்சிக்கு கம்யூனிஸ்ட் கட்சி அறைகூவல்

பாண்டிச்சேரி, அக். 15—

அரவிந்த ஆசிரமத் தொழிலாளர்கள் ஐவர் தங்களின் கோரிக்கைகளுக்காக ஆசிரமத்தின் பிரதான வாயிலில் அமைதியாக அனுஷ்டித்து வரும் உண்ணுவிரதம் இன்ருேடு 12 நாட்களாகிறது. ஏற்கனவே இவர்களில் இருவருடைய நிலைமை மோசமாகி, இப்போது ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டுள்ளனர். இவர்களோடு சேர்ந்து, ஆசிரமத் தொழிலாளர் சங்கத்தின் முக்கிய ஊழியரான கோவிந்தசாமி இன்று உண்ணுவிரதத்தில் கலந்து கொண்டார்.

இதற்கிடையே உண்ணுவிரதமிருக்கும் தொழிலாளர்களுக்கு நகரில் மேலும் மேலும் ஆதரவு பெருகி வருகிறது. இன்று நகரத்தின் முக்கிய பிரமுகர்களும், புதுவை, முதலியார்ப்பேட்டை, உழவர்கரை மேயர்களும், மற்றும் நகரத்தின் வழக்கறிஞர்கள், டாக்டர்கள், வியாபாரிகள் முதலியோருமாக 180 பேர்கள் புதுவை ராஜ்ய கமிஷனருக்கு ஓர் மகஜர் மூலம் உண்ணுவிரதத்தில் தலையிடும்படி வேண்டுகோள் விடுத்துள்ளனர். நகரப்பிரமுகர்கள் சார்பில், புதுவை உதவி மேயர் நகர சமாதானக் கமிட்டித் தலைவர் திரு. சேதுராம செட்டியார் ஆகிய இருவரும் மகஜரை பிரதம கமிஷனருக்கு அனுப்பியதுடன் பிரதமர் நேருவுக்கும், கம்யூனிஸ்ட் தலைவர் ஏ. கே. கோபாலனுக்கும் மகஜர் சமர்ப்பித்துள்ளதுபற்றி தந்தி அனுப்பியுள்ளனர். தொழிலாளர் கோரிக்கைகளுக்கு தி. மு. கழகம் ஆதரவு தெரிவித்துள்ளது.

புதுவை ராஜ்ய கம்யூனிஸ்ட் கட்சி அரவிந்தர் ஆசிரமத் தொழிலாளர்களின் உண்ணுவிரதம்பற்றி கீழ்க்கண்ட அறிக்கையை விடுத்துள்ளது:—

புதுவையின் எல்லாப் பகுதி மக்களுடைய விருப்பத்திற்கும், அரசாங்கத்தின் சமரச ஆலோசனைகளுக்கும் புறம்பாக, தான்தோன்றித் தனமாக நடந்துவரும் ஆசிரம நிர்வாகத்தின் போக்கைக் கண்டிக்க முன்வர வேண்டும். தமிழ் மக்களின் விரோதிகளான இந்த ஆசிரம வாசிகளை வியாபாரத் துறையிலும், சமூகத்துறையிலும், மற்ற எல்லாப் பொதுத்துறையிலும் பகிஷ்கரிக்க பொதுமக்களை வேண்டுகிறோம்.

அரசாங்க நிபுணர் தீர்ப்பை அலட்சியப்படுத்தி, அரசாங்க சமரச யோசனைகளையும் ஆசிரம நிர்வாகம் மீறிவிட்டது என்று சொல்லி, இனி தங்களால் ஆகவேண்டியதுஒன்றுமில்லையென்று அரசாங்கம் வாளாவிருப்பது கூடாது. நியாயமான உரிமைகளை வழங்க நிர்வாகத்தைக் கட்டுப்படுத்தும் முறையில் உடனடியாக சட்டபூர்வமான நடவடிக்கைகளை எடுக்கவேண்டும்.

உண்ணுவிரதமிருப்பவர்களின் நிலைமை இன்னும் மோசமாவதற்குள் இப்பிரச்னையில் உடனடியாகத் தீர்வுகாண புதுவைப் பொதுமக்களின் ஏகோபித்த நடவடிக்கை தேவை. இதற்காக வியாபாரிகளும், மாணவர்களும், தொழிலாளர்களுமாக சேர்ந்து அமைதியான ஓர் ஹர்த்தாலுக்கு ஏற்பாடு செய்யுமாறு கம்யூனிஸ்ட் கட்சி கேட்டுக்கொள்கிறது.

## சத்தியமங்கலத்துக்கு ரயில்வே இணைப்பு

மைசூர், அக். 16—

சாமராஜ நகருக்கும் சத்தியமங்கலத்துக்கும் ரயில்வே பாதை அமைப்பதென ரயில்வே போர்டு முடிவு செய்துள்ளது. அதன்படி வேலைகளும் தொடங்கி விட்டதாக ரயில்வே மந்திரி லால் பகதூர் சாஸ்திரி மைசூர் டவுன் ஹால் கூட்டத்தில் கூறினர்.

## அரசியல் கைதிகளை விடுதலை செய்க!

### பட ஊர்வலம்

சென்னை, அக். 15—

சென்னை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சியின் வடசென்னை ஏரியாக் கமிட்டி சார்பில் அரசியல் கைதிகள் விடுதலைக்கிளர்ச்சிகவர்ச்சிகரமான முறையில் நடைபெற்றது. 14-10-56ல் பாலுவைத் தூக்கிலிட்ட காட்சியையும், சேலம் சிறை படுகொலைக் காட்சியையும், சிறையில் வாடும் 26 கம்யூனிஸ்டு, தொழிற்சங்க, விவசாய சங்கத் தலைவர்கள் சிறைக்கூடத்தில் அடைத்திருப்பது போன்ற காட்சியையும் படமாக பெரிய அட்டைகளில் வரைந்தும், 26 பேர்களின் தண்டனைக் காலம் பொறிக்கப்பட்ட தட்டிகளையும் ஏந்திக்கொண்டு, 1-வது, 2-வது வட்டப்பகுதிகளில் ஊர்வலம் நடத்தினர்கள். இவற்றைக் கண்ணுற்ற பொதுமக்கள் மனம் உருகி, கம்யூனிஸ்டுகளை உடனே விடுதலை செய்ய வேண்டுமென்று கோஷித்தார்கள். இத்தகைய இயக்கம் தொடர்ந்து நடைபெறும். (ந. நி.)

ரோடியர் மில்

# உள்ளிருப்பு வேலைநிறுத்தம்

புதுவை, அக். 15—

ரோடியர் மில் உள்ளிருப்பு வேலை நிறுத்தம் செய்துவரும் தொழிலாளிகளுக்கு உணவு அனுமதிக்காமல் போனதன் விளைவாக 13-ந் தேதி காலை சுமார் 10 மணிக்கு ரோடியர் தொழிலாளிகள் ஊர்வலமாக வந்து கிளர்ச்சி செய்தனர். அரசாங்கம் தலையிட்ட பிறகு உணவுகொண்டு செல்ல அனுமதிக்கப்பட்டது. அரசாங்கத்தின் கட்டளைக்கு மில் நிர்வாகம் பணியாததால் போலீஸ் காவல் வாபஸ் பெற்றுள்ளது. இருந்தும் அமைதியாக வேலை நிறுத்தம் நீடிக்கிறது.

### பிரதம கமிஷனருடன் பேட்டி

புதுவை ரோடியர் மில் வேலை நிறுத்தம் இன்ருேடு எட்டு நாட்களாக நீடித்து வருகிறது. இன்று ஏ. ஐ. டி. யு. சி. சங்க சார்பில் வ. சுப்பையாவும், டி. கே. ராமானுஜமும் புதுவை ராஜ்ய பிரதம கமிஷனரைப் பேட்டி கண்டனர். ஐ. என். டி. யு. சி. சங்கத்தின் சார்பில் மஸ்கரஞஸ் இதில் கலந்துகொண்டார். பேச்சுவார்த்தையில் எவ்வித முடிவும் ஏற்படவில்லை.

நேற்று நடந்த தொழிற்சங்க கவுன்சில் பொதுக்கூட்டத்தில் அரசாங்கம் தலையிட்டு நிர்வாகத்தை வற்புறுத்தி தகராறை தீர்த்து வைக்க வேண்டுமென்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

## சன் யாட்-சென் சமாதிக்கு சுகார்னே மரியாதை

நாங்கிங், அக். 9—

இந்தோனேஷிய ஜனாதிபதி சுகார்னே, இன்று புரட்சித் தலைவர் சன் யாட்-சென் சமாதிக்கு அஞ்சலி செலுத்தினர். $1\frac{1}{2}$ லட்சம் சீனமக்கள் அணிவகுத்து நின்று சுகார்னே வாழ்க என்று கோஷித்து மலர்மாரி பொழிந்தார்கள்.

—நவசீன செய்தி

## 5 லக்ஷம் பேர் வரவேற்பு

ஷாங்காய், அக். 10—

சீனவின் மாபெரும் நகரமான ஷாங்காய் நகரில் ஜனாதிபதி சுகார்னேவுக்கு 5லக்ஷம் பேர்கூடி வரவேற்பளித்தார்கள்.

—நவசீன செய்தி.

## அது நடக்காது

### மா சே-துங் அறிவுறுத்தல்

பீகிங், அக். 18—

"ஏகாதிபத்யவாதிகள் $8\frac{1}{4}$ கோடி இந்தோனேஷிய மக்களையும் 60 கோடி சீன மக்களையும் பிரிக்கப் பார்க்கிருர்கள். நாம் பரஸ்பரம் பகைவர்களாகவும், ஒத்துழையாதவர்களாகவும் இருக்க வேண்டுமென்று அவர்கள் விரும்புகிருர்கள். ஆனல் அது இனி நடக்காது" என்று ஜனதிபதி மா சே-துங் ஜனதிபதி சுகார்னேவுக்கு அளித்த ராஜ விருந்தின் போது தெரிவித்தார்.

### சகோதரரே, வருக!

அதற்கு சுகார்னே பதில் அளிக்கையில், "மா சே-துங் அவர்களே! எனது அருமைச் சகோதரரே! இந்தோனேஷியாவில் உங்களை வரவேற்க எங்கள் மக்கள் காத்துக் கொண்டிருக்கிருர்கள்" என்ருர்.

—நவசீன செய்தி.

## ஜனசக்தி வாசிக்க பஞ்சாயத் அனுமதி

சோளிங்கபுரம், அக். 12—

வடாற்காடு ஜில்லா சோளிங்கிபுரம் பஞ்சாயத் போர்டு வாசகசாலைக்கு ஜனசக்தி, சோவியத் நாடு, கற்கண்டு, தினத்தந்தி பத்திரிகைகளை வரவழைப்பதென போர்டு கூட்டத்தில் ஏகமனதாகத் தீர்மானித்தார்கள். (ந. நி.)

## தும்பு, ஈக்கித் தொழிலாளர் கூட்டம்

தூத்துக்குடி, அக். 15—

தூத்துக்குடி தும்பு, ஈக்கித் தொழிலாளர் சங்கக் கூட்டம் சென்ற 11-ம் தேதி சுப்பிரமணியம் தலைமையில் நடைபெற்றது. 400 பெண் தொழிலாளர்கள் உள்பட 600-க்கு அதிகமான தொழிலாளர்கள் வந்திருந்தனர். தும்பு ஈக்கித் தொழிலாளர்களின் நிலை பற்றி, தோழர்கள் எஸ். ஏ. முருகானந்தம், எஸ். நடராஜன், எஸ். டி. நாயகம் முதலியோர் பேசினர்.

# சட்டசபைமுன் மறியல்

## பீடித் தொழிலாளர் உறுதி

சென்னை, அக். 13—

சென்னை சர்க்கார் பீடித்தொழிலுக்குச் சட்டம்கொண்டு வருவதாகச் சொல்லி கடந்த 3 வருடங்களாக ஏமாற்றி வருகிறது. ஆகஸ்டு 18-ல் தமிழ்நாடு பீடி, சுருட்டுத் தொழிலாளர் தூது கோஷ்டி, தொழில் மந்திரியிடம் மகஜர் கொடுத்தபோது, செப்டம்பர் சட்டசபைக் கூட்டத்தில் சட்டம் கொண்டு வருவதாக ஸ்ரீ பக்தவத்சலம் வாக்களித்தார். ஆனல் வாக்களித்தபடி சட்டம் கொண்டு வரவில்லை. இதனல் அதிருப்தியுற்ற சென்னை ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்கம் தலைவர் ஏ. ராகவன் தலைமையில் 11-10-56ல் கூடி, அக்டோபர் கடைசியில் நடைபெறும் சென்னை சட்டசபைக் கூட்டத்தின்போது, பீடித் தொழிலுக்கு சட்டமியற்றும்படி மறியல் செய்வதென தீர்மானித்தார்கள். (ந. நி.)

## சுருட்டுத் தொழிலாளர்

குடந்தை, அக். 17—

1000 சுருட்டுக்கு கூலி ரூ. 3-ம், 1000 பீடிக்கு ரூ. 2-4-0 ஆகவும் நிர்ணயிக்க வேண்டுமென்ற குடந்தை சுருட்டுத் தொழிலாளர் சங்கப் பொதுச்சபைக் கூட்டம் தலைவர் டி. எஸ். சோமுராவ் தலைமையில் 13-10-56 ல் நடைபெற்றபோது தீர்மானித்தார்கள். தோழர்கள் எம். எஸ். ஆறுமுகம், ஆர். கோவிந்தசாமி ஆகியோர் பேசினர்கள். (ந. நி.)

## 'சாதி அவசியமா?'

சென்னை, அக். 16—

இத்தலைப்பில் சென்னை லயோலாக் கல்லூரி மாணவர்கட்கும் சென்னை ஒய். எம். சி. ஏ. பட்டிமன்றத்திற்கும் ஓர் விவாதம் நடைபெற்றது. திரு. க. வேழவேந்தன் 'சாதி தேவையில்லை'என்று ஆரம்பித்து வைத்தார். அவரையொட்டி ருஷ்யா சென்று திரும்பிய ஆங்கிலப் பேராசிரியர் திரு. அரங்கநாதன் அவர்களும், ஜி. பக்தவத்சலம், பொன்னன் ஆகியோரும்பேசினர். விவாதத்தை எதிர்த்துதிரு. சுப்பிரமணியம் பேசினர். திரு. ஜி. பி. அமுதா இவ்விவாதத்திற்குத் தலைமை வகித்தார். திரு. ஊ. ஜெயராமன் நன்றி கூறினர்.

## வேலையைவிட்டு நீக்கியதைக் கண்டித்து மறியல்

மாரிக்குப்பம், அக். 17—

மாரிக்குப்பம், சுரங்கக் கம்பனி, ரோஜர்ஸ் ஷாப்டில் வேலை செய்து வந்த பென்னி, முனிசாமி, ரத்தினம், பிச்சைமுத்து, கிஷ்டன் 5 தொழிலாளர்களை நியாய விசாரணையின்றி வேலையிலிருந்து கம்பனியார் நீக்கியுள்ளதைக்கண்டித்தும், அத்தொழிலாளிகளை வேலைக்கு எடுத்துக்கொள்ள வேண்டுமெனக் கோரியும் மைசூர் மைன் ஒர்க்கர்ஸ் யூனியன் உபதலைவர் ஆர். கே. ரங்கசாமி, சி. மாரி, ராமசாமி, கிஷ்டன், டேவிட், ஆகியோர் மைசூர் மைன் கம்பனியாரின் ஆபீஸ் முன், நேற்று காலை 7-30 மணிக்கு சத்தியாக்கிரகம் ஆரம்பித்தனர், கம்பனி அதிகாரிகள் ஆபீஸுக்குள் நுழைவதைக் தடை செய்தனர். போலீஸின் பலத்தைப் பாதுகாப்பு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

கம்பெனி சூப்ரண்டு, சங்கத் தலைவர் கோவிந்தனுடன் பேச்சுவார்த்தை நடத்தி, வேலையிலிருந்து நீக்கப்பட்டுள்ள தொழிலாளிகளின் பிரச்னையை கன்சிலேஷன் ஆபீஸர் முன் பரிசீலிப்பதற்கும், அப்பரிசீலனை பலனளிக்க வில்லையானல், கோலார் ஜில்லாவிலுள்ள ஒரு மாஜிஸ்ட்ரேட் தலைமையின் கீழ் அர்பிட்ரேஷன் மூலம் தீர்த்துக் கொள்ளலாம் எனவும் முடிவு ஏற்பட்டது. பின் சத்யாக்கிரகம் வாபஸ் பெறப்பட்டது, (ந. நி.)

# மைசூர் ராஜ்ய தொழிற்சங்க மகாநாடு

ஆண்டர்சன் பேட்டை, அக். 18—

கோலார் தங்கவயலில் இம்மாதம் 27, 28 தேதிகளில் மைசூர் சமஸ்தான தொழிற்சங்க கௌன்சில் முதல் மகாநாட்டை நடத்துவதென அதன் நிர்வாகக் குழு முடிவு செய்துள்ளது. நவம்பர் முதல் தேதியிலிருந்து ஏற்படவிருக்கும் ஐக்ய கன்னடப் பகுதி தொழிலாளிகளின் ஒன்றுபட்ட ஸ்தாபனமாக மைசூர் சமஸ்தான தொழிற் சங்கக் கவுன்ஸிலை உருவாக்குவது இம்மகாநாட்டின் பிரதான நோக்கமாகும்,

2. சமஸ்தானம் பூராவிலிருந்தும், ஐதராபாத், பம்பாய், மங்களூர் கன்னடப் பகுதிகள், குடகு போன்ற இடங்களிலிருந்தும், பல்வேறு தொழில்களில்ஈடுபட்டுள்ள தொழிலாளர்களின் பிரதிநிதிகளாக சுமார் 100 பேர் இம மகாநாட்டில் பங்குகொளவர் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தங்கவயல் தொழிற்சங்கங்கள் மகாநாட்டிற்கான ஏற்பாடுகளை செய்து வருகின்றன. மகாநாட்டு வேலைகளுக்கு உதவ தொண்டர் படை ஸ்தாபனம் நிறுவப்பெற்று வேலைகள் நடைபெற்று வருகின்றன.

தோழர் பி. ராமமூர்த்தி மகாநாட்டிற்குத் தலைமை வகிப்பார் என கவுன்ஸில்காரியதரிசி எம்.சி. நரசிம்மன் அறிவிக்கிருர். (ந. நி.)

## நகரசபைக் கணக்கர் மீது நம்பிக்கையில்லாத் தீர்மானம்

கடலூர், அக். 17—

கடலூர் நகரசபையின் கணக்கர் திரு. ராமச்சந்திரராவ் தன் வேலையைச் சரியாகப் பார்க்காததாலும், வரிவிதிப்பு முறைகளைச் சரியாகக் கவனிக்கவில்லை யென்பதாலும், மேலும் நகரசபையின் கட்சிப் பிரதிகட்சி அரசியலில் பங்கெடுத்துக் கொள்வதாலும் நிர்வாகத்தில் பெரும் ஊழல் ஏற்பட்டுள்ளதால், அவரை வேறு எங்காவது மாற்றிவிட வேண்டுமென்று, சர்க்காரைக் கேட்டுக் கொண்டு நேற்று ஏ. ஆர். தாமோதர முதலியார் என்ற ஒரு கவுன்சிலரின் தலைமையில் கூடிய, கடலூர் நகரசபையின் 17 அங்கத்தினர்களுடைய பிரத்தியேகக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேற்பட்டது.

11 கவுன்சிலர்கள் கேட்டுக் கொண்டும் நகரசபைக் கூட்டத்தைச் சேர்மன் முறையாகக் கூட்டாததாலேயே மேற்படி பிரத்தியேகக் கூட்டம் நடைபெற்றது. (ந. நி.)

## மார்க்கெட் நிலவரம்

### தங்கம், வெள்ளி

சென்னை, அக். 18 -

| | |
|---|---|
| சவரன் | 67-6-0 |
| தங்கம் ரெடி | 104-13-0 |
| மூசை தங்கம் | 103-6.0 |
| வெள்ளி 100 தோலா எடை | 175-4-0 |
| வெள்ளி 1 ரூபாய் எடை | 1-12-6 |

### மணிலாப்பயறு

531 ரா. கொண்ட பாரம் 1-க்கு விற்பனைவரி உள்பட புதிய சரக்கு

| | |
|---|---|
| உயர்ந்த ரகம் | 160 மு. 161 |
| சாதா | 155 மு. 156 |

### மணிலா எண்ணெய்

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி (மதராஸ்) கிடங்கு டெலிவரி 3% *F. F. A.* (மொத்த விலை

| | |
|---|---|
| ரெடி) | 312-0-0 |
| அக்டோபர் | 305-0-0 |

### விளக்கெண்ணெய்

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி)

| | |
|---|---|
| திருப்பத்தூர் | 315-0-0 |
| சேலம் "தாமரை" "அன்னம்" ($37\frac{1}{2}$ ரா. டின் உள்பட) | 24-0-9 |

### தேங்காய் எண்ணெய்

$37\frac{1}{2}$ ரா, கொண்ட டின் 1-க்கு (விற்பனை வரி தனி) கொல்லம் சரக்கு எம். எஸ்.

| | |
|---|---|
| மார்க் | 27-8-9 |
| ராஜா மார்க்கு | 26-12-9 |
| அம்பு மார்க்கு | 26-12-9 |

### சர்க்கரை

| | |
|---|---|
| எக்ஸைஸ்வரி விற்பனை வரி உள்பட) பிரிட்டிஷ் சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரை (2 அந்தர்) | 90-0-9 |
| சாமல் கோட்டை (2 அந்தர்) | 94-0-9 |
| கிர்லாம்புடி (227 ரா) | 94-0-9 |

Regd. No.M. 5934

Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press, (Phone 2241) 32, Broadway, Madras-1.
Editor: P. JEEVANANDAM

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON